REGD. No. TN-MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலே 40 காசு



நூலகம்

நாடு நலம் பெற வீட்டுக்கு ஒரு புத்தக சாலே வேண்டும்.

-பேரறிஞர் அண்ணு

# அண்ணு

நிறுவனர்: எம். ஜி. ஆர்

வாலிபர்கள்

வாலிபர்களுக்கு உற்சாகம், துணிவு, தியாக புத்தி இவை மட்டும் போதாது. நன்மை தீமை அறியும் குணமும் சாத்தியம் அசாத்தியம் அறியும் குணமும் அவசியம்.

- தந்தை பெரியார

● மலர் 5 சென்னே 21—8—1981 வெள்ளி வெளியூர்: 22—8—1981 சனி இதழ் 302 ●

முதல்வர் பற்றி அவதூறு கூறிய

# கருணுநிதிக்கு நோட்டீஸ்: அரசு தொடர்ந்த வழக்கில்

சென்னே, ஆக. 21—தமிழக முதல்வர் பற்றி அவதூறு கூறியதாகத் தொடரப்பட்ட வழக்கில் கருணுநிதிக்கு நோட்டீஸ் அனுப்பப்பட்டுள்ளது.

தி.மு.க. தலேவர் கருணுநிதி முதல்வர் பற்றி அவதூருக பேசியதாக ப்ரின்சிபல் செசன்சு நீதிபதி சிங்கார வேலு கோர்ட்டில் நகர பப்ளிக் பிராசிக்கியூட்டர் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

இந்த வழக்கு இன்று காலே விசாரணேக்காக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இந்த வழக்கில் அரசு சார்பில் கூறப்பட்டுள்ளதாவது:—

சென்னே மாம்பலம் மதுரை வீரன்கோவில் தெருவில் கடந்த 6·7·81 அன்று நடந்த கூட்டத்தில் (கருணுநிதியும்) மற்றும் பலரும் பேசியிருக்கிருர்கள். சுமார் 5ஆயிரம் பேர் பங்கேற்ற அக்கூட்டத்தில் அனேவரும் பேசுவதைக் கேட்க தக்கவசதிகள் செய்யப்பட்டிருந்தன.

இக்கூட்டத்தில்கருணுநிதி முதல்வர் மீது அவதூருன வகையில் பேசியுள்ளார்.

முதல்வரின் நடத்தையையும் அவரது செயலாற்றும் திறனே விமர்சித்தும் கருணுநிதி பேசியுள்ளார்.

படி வழக்கு போடட்டும் நான் சந்திக்கத் தயார். நிருபிக்கத்தயார்"

இவ்வாறு கருணுநிதி பேசினுர்.

நண்பர்களாலும் கட்சிக்காரர்களாலும் அதிகாரிகளாலும் பெரிதும் மதிக்கப்பட்டு வரும் முதல்வர் மீது அவநம்பிக்கையை உருவாக்கும் வகையில் புகார்தாரர் (கருணுநிதி) பேசியுள்ளார்.

அவரது பேச்சு அரசியலில் குழப்பத்தை உருவாக்கக் கூடியதாகும்.

பாட்டிலில் சாராயத்தை அடைத்து விற்பதற்கான அமைப்புகளே நிறுவுதல் இவ்வாறு பாட்டில்களில் அடைத்து

சாராயத்தை ஒவ்வொரு மாவட்டத்திலும் விற்பதற்காக மொத்த சப்ளே மற்றும் சாராயத்தை சில்லறையாக விற்பது ஆகியவிஷயங்கள் குறித்து தனது பதவியை தவருக முதல்வர் பயன்படுத்திஞர் என்று பேசியுள்ளார்.

கட்சிக்காரர்கள் மற்றும் நண்பர்கள், மக்கள் மத்தியில் தமிழக முதலமைச்சரின் பெயரையும் புகழையும் குறைக்கும் வகையில் கருணுநிதி பேசியுள்ளார்.

தனிப்பட்ட மற்றும் அரசியல் துறையில் முதலமைச்சரின்நேர்மையைக்

(8ம் பத்தி பாக்க)

## பேரணி தோல்வி: கருணுநிதி அதிர்ச்சி

சென்னே, ஆக. 21—சென்னேயில் இன்று நடக்க இருந்த தி.மு.க. கறுப்புச் சட்டை ஊர்வலம் படுதோல்வி அடைந்தது. கூட்டம் சேராததால் கருணுநிதி அதிர்ச்சி அடைந்தார்.

கழக அரசை எதிர்த்து தி.மு.க. மூன்று கட்ட போராட்டம் நடத்தும் என்று அறிவித்து பொதுக் கூட்டம், ஊர்வலம் நடத்திஞர்கள்.

மாவட்டங்களில் நடைபெற்ற ஊர்வலம் ஏற்கெனவே படுதோல்வி அடைந்தது. மதுரை, திருச்சி போன்ற பெரிய நகரங்களில் கூட ஊர்வலத்துக்கு ஆயிரத்துக்கும் குறைவானவர்களே வந்திருந்தனர் என்ற விவரத்தை தி.மு.க.வை ஆதரிக்கும் ஏடுகள் அறிவித்திருந்தன.

இன்று சென்னேயில் கறுப்புச்சட்டை ஊர்வலம் நடக்கும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.இதற்காக நாடுமுழுவதிலுமிருந்து தி.மு.க. வினர் வந்து கலந்து கொள்ளுமாறு கருணுநிதி அழைப்பு விடுத்திருந்தார்.

ஆனுல் இன்று பிற்பகல் 2 மணிவரை வெளி மாவட்டங்களில் இருந்து 15க்கும் குறைவான வாகனங்களிலேயே தொண்டர்கள் வந்திருந்தனர். 3 மணிக்கு கறுப்புச்சட்டை ஊர்வலம் தொடங்கும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனுல் கூட்டம் சேராததால் 5 மணி அளவில் தான் ஊர்வலத்தைத் தொடங்குவது என்று முடிவு செய்தனர்.

வந்த தொண்டர்களிலும் பலர், கருணுநிதி அறிவித்தபடி கறுப்புச் சட்டை அணியவில்லே. கூட்டம் சேராததால் கருணுநிதிக்கு பெரும் அதிர்ச்சியும், ஏமாற்றமும் ஏற்பட்டுள்ளது. கறுப்புச் சட்டைப்பேரணி என்பது கருணுநிதியைப் பொறுத்த வரை மிகவும் துககரமாக அமைந்து விட்டது.

## கருணுநிதி அவதூறு

அவரது பேச்சின் ஒரு பகுதி வருமாறு:—

"உண்மையிலேயே வருவாய்த்துறை அமைச்சர் ஒருவர் இருக்கிருர். அவர் தான் முதலமைச்சர். அவர் வருவாய் என்ன? என்றே பார்த்துக் கொண்டிருப்பவர். அந்த வருவாய் அரசாங்க கஜாணுவுக்கா? ராமாவரம் தோட்டத்துக்கா? என்று அந்த வருவாயைஎதிர்பார்த்துக் கொண்டிருக்கிற ஒரு முதலமைச்சர் பாட்லிங் யூனிட் - அதைப்போலவே பிளெண்டிங் யூனிட்- சாராய கலவை தொழிற்சாலே - அதைப் போலவே சாராயத்தை புட்டிகளிலே அடைக்கின்ற தொழிற்சாலே - அப்படி அடைக்கப்பட்ட புட்டிகளே விற்பனே செய்ய ஒவ்வொரு மாவட்டத்திற்கும் மொத்த விற்பனேயாளர்- அதற்குப்பிறகு சில்லரை விற்பனேயாளர் இவ்வளவு ஏற்பாடுகளேயும் செய்து ஒவ்வொரு படிக்கட்டிலும் ஒவ்வொரு கட்டத்திலும் கோடிக்கணக்கான ருபாயை லட்சமாகப் பெறுகின்ற ஒரு நிலே இன்றைக்கு நாட்டிலே ஏற்பட்டிருக்கிறது. நான் பகிரங்கமாக குற்றம் சாட்டுகிறேன். முதலமைச்சர் அப்படிப்பட்ட காரியங்களில்பச்சையாக லஞ்சம் வாங்கி இருக்கிருர் மறுப்பதாக ருந்தால் கருணுநிதி சொல்வது தவருக இருந்தால் கருணுநிதியை எம்.ஜி.ஆர். நீதிமன்றத்திலே சந்திக்கத் தயாரா? என மீது மானநட்ட வழக்கே போடட்டும். அல்லது கிரிமினல் சட்டப் பிரிவுப்

தேசிய பாதுகாப்பு சட்டத்தின் கீழ்

## நகரில் மேலும் மூவர் கைது

சென்னே, ஆக. 21—கொள்ளே வழக்குகளில் சம்பந்தப்பட்ட பூனேக் கண்ணு பாபு (வயது 45) கொலே கொள்ளே வழக்குகளில்சம்பந்தப்பட்ட காளி (வயது 24), திருட்டுச் சொத்துக்களே வாங்கியதாக ராமதாஸ் செட்டியார் (வயது 46) ஆகிய மூவரும் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் கைதுசெய்யப்பட்டுள்ளனர்.

இலங்கைத் தமிழர்களுக்கு இன்னல்விளேவிப்பதைகண்டித்து

# பொது அர்த்தால்

## சட்டசபையில் முதல்வர் யோசனே

சென்னே, ஆக. 21-இலங்கைத் தமிழர்களுக்கு இன்னல் விளேவிப்பதைக் கண்டித்து தமிழகத்தில் ஒரு நாள் பொது அர்த்தால் நடத்தலாம் என்ற யோசனேயை முதல்வர் புரட்சித்தலேவர் இன்று சட்டசபையில் வெளியிட்டார்.

சட்டப்பேரவையில் இலங்கைத் தமிழர் பிரச்சினே குறித்து அரசின் சார்பில் கொண்டு வரப்பட்ட தீர்மானத்தின் மீது பேசுகையில் முதல்வர் புரட்சித்தலேவர் கூறியதாவது:-

மிகமுக்கியமான- அவசரமாக கருதி சொல்ல வேண்டிய பிரச்சினேயில் அரசும் அனேத்துக் கட்சியினரும் கவனம் செலுத்துவதும் ஏகமனதாகஏற்றுக் கொள்வதும் தமிழர்களின் உரிமைகளே பாதுகாக்க அவர்கள் எங்கிருந்தாலும் உத்தரவாதம் இருக்கிறது என்ற மகிழ்ச்சி ஏற்படுத்துகிறது.

நிறைவேற்றித் தருமாறும் தொடர்ந்து நடவடிக்கை எடுக்க அர்த்தாலுக்கு ஆதரவு தருமாறும் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலேவர் பேசினுர்.

இதை அடுத்து சபாநாயகர் ராசாராம் தீர்மானத்தை சபையின் முடிவுக்கு விட்டார்.

தீர்மானம் ஒருமனதாக நிறைவேறியது.

பின்னர் சபை நாளே நடைபெறும் என்று சபாநாயகர் அறிவித்தார்.

இலங்கைத் தமிழர்களே பாதுகாக்க உடனே நடவடிக்கை எடுக்கக்கோரி

# சட்டசபை தீர்மானம்

## அனேத்துக் கட்சிகள் ஆதரவு - பாராட்டு

சென்னே, ஆக. 21—இலங்கைத் தமிழர்களேப் பாதுகாக்க உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று மத்திய அரசை வற்புறுத்தி தமிழக சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அத்தீர்மானத்தை கருணுநிதி பாராட்டினுர், அனேத்துக் கட்சிகளும் வரவேற்றன.

தமிழக சட்டசபையில் இன்று இலங்கைத் தமிழர்களுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தான சூழ்நிலே குறித்து தமிழக அரசின் சார்பில் அவை முன்னவர் டாக்டர் நாவலர் தீர்மானம் ஒன்றை முன்மொழிந்தார்.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:

இலங்கையில்வாழும்நிலேயான தமிழர், இந்தியர் வழி வந்த தமிழர், மலேத் தோட்டத் தமிழ்த் தொழிலாளர் ஆகியோரின் உயிருக்கும், உடைமைக்கும், உரிமைக்கும் ஆபத்து ஏற்பட்டிருப்பதையும் இனவெறியர்களால் கொலே, கொள்ளே, கற்பழிப்பு, துன்புறுத்தல் போன்ற வன்முறைச் செயல்கள் நிகழ்வதையும், அங்கு தக்கப் பாதுகாப்பு அளிக்காத நிலே நிலவுவதையும் அறிந்து மனிதாபிமான அடிப்படையில் இப்பேரவைமிக்க அதிர்ச்சியையும், கவலேயையும் கொள்கிறது.

### புரட்சித்தலேவர் கோரிக்கை

தமிழக மக்களின் சார்பாக முதலமைச்சர் இந்திய பிரதமருக்குத் தெரிவித்திருப்பதற்கு ஏற்ப இந்திய அரசு தூதரகத்தின்மூலமும், ஐ.நா.அவையின் மூலமும் மற்ற முறைகள் மூலமும் இலங்கை வாழ் தமிழர்களுக்கு நியாயம் வழங்க முற்படுவதோடு அவர்களுக்கு எல்லாவிதமான பாதுகாப்புகளேயும் அளிக்கத் தக்க நடவடிக்கைகளே எடுக்குமாறு இந்தப் பேரவை இந்தியப் பிரதமரைக்கேட்டுக்கொள்கிறது.

இலங்கையில் ஏற்பட்டுள்ள இனக் கலவரத்தில் படுகொலேக்கு ஆளானவர்களின் குடும்பங்களுக்கும், காயமுற்றும் மற்றும் பல தொல்லேகளுக்கு ஆளாகியும் அவதியுறும் மக்களுக்கும் இப்பேரவை தனது இரங்கலேயும் ஆறுதலேயும் தெரிவித்துக்கொள்கிறது.

இந்த தீர்மானத்தை முன்மொழிந்து அவை முன்னவர் டாக்டர் நாவலர் பேசுகையில் இந்த அவையிலுள்ள அனேவரும் ஒருமனதாக இந்த தீர்மானத்தை நிறைவேற்றித் தரவேண்டும் என்றும் இதன்மூலம் இந்திய பிரதமர் தக்க வழி வகைகள் செய்யவும் கேட்டுக் கொண்டார்.

இதையடுத்து எதிர்க்கட்சித்தலேவர் கருணுநிதி தீர்மானத்தை வழிமொழிந்து பேசினுர்.

இலங்கைத் தமிழர் பிரச்சினே குறித்து பிரதமர் இந்திராவிடம் தமிழக முதல்வர் எடுத்துக்கூறியுள்ளார். நானும் பிரதமரிடம் இது பற்றி தெரிவித்தேன். இப்பிரச்சினே குறித்து தக்க நடவடிக்கை எடுப்பதாக தமிழக முதல்வரிடம் பிரதமர் கூறியதாக பத்திரிகைகளில படித்தேன். என்னிடமும் இந்த கருத்தினேபிரதமர்தெரிவித்துள்ளார். இது எனக்கு ஆறுதலேயும் மனநிறைவையும் தருகிறது. இத்தகைய தீர்மானம் அரசின் சார்பில் வருவது பொருத்தமாகும். இதனே மனநிறைவோடு வரவேற்கிறேன்.

இவ்வாறு கருணுநிதி பேசினுர்.

இதை அடுத்து ஹாஜா ஷெரீப், சங்கரய்யா, குமரி அனந்தன், ப. நெடுமாறன், அழகிரிசாமி, ஆண்டித்தேவர், முகமது இஸ்மாயில், சாகுல் அமீது, ஜி. மூர்த்தி ஆகியோரும் பேசினர்.

### கருணுநிதி கருத்து

எதிர்க்கட்சித் தலேவர் இத்தீர்மானத்தை வரவேற்று பேசுகையில் மனம் திறந்து பேசி பிரச்சினேயை எங்கும், யாரும் இழுத்துச்சொல்லக்கூடாது என்ற கருத்தினே வெளியிட்டார். அதற்காக அவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

அதே போல் பல்வேறு கட்சித் தலேவர்களும் ஈழத்துத் தமிழர்களுக்கு ஆபத்து விளேவிப்பதை இன்னல்கள் விளேவிப்பதை இந்த மன்றம் ஏற்றுக் கொள்ளாது என்று தெரிவித்துள்ளனர். அதற்காகவும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

சில மாதங்களாக நமக்குக் கிடைக்கும் செய்திகள் அது அன்னிய நாடாக இருந்தாலும் நமது மககள் என்ற அடிப்படையில் அதுபற்றி கேட்பதற்கு உரிமை உண்டு என்பதை தெரிவிக்கும் நிலே உருவாகியுள்ளது.

### அர்த்தால்

நாம் நமது எண்ணங்களே தெரிவிக்க விரைவில் ஒன்று கூடி, எதிர்க் கட்சியினரும் சேர்ந்து ஒருநாள அர்த்தால் நடத்துவது பொருத்தமாக இருக்கும். மத்திய அரசுக்கு நாம் சொல்வது புதியதல்ல. பிரதமர் அவர்களும் இது பற்றி தெரிந்து வைத்துள்ளார்கள். அவர்களுக்கு பக்க பலத்தை உருவாக்கவும், தமிழர்களின் உள்ள உணர்வை உலக மக்கள் புரிந்து கொள்ளவும், தமிழக அரசு சார்பாக உங்களுக்குத் தெரிவித்துக் கொள்வது இந்த அரசு உங்களோடு இணேந்து நடவடிக்கைகளே எடுக்கும்.

ஆகவே இந்த தீர்மானத்தை ஒருமனதாக

(4ம் பத்தி தொடர்ச்சி)

கெடுக்கும் வகையில் கருணுநிதி பேசியுள்ளார்.

கருணுநிதியின் இந்த ஆட்சேபகரப் பேச்சின் மூலம் பொதுமக்கள், முதல்வர் தனது அதிகாரத்தை தவருகப் பயன்படுத்தியுள்ளாரோ என்ற நிலேயைத் தோற்றுவித்துள்ளது.

கருணுநிதி கூறியுள்ள புகார்கள் ஆதார மற்றது. உண்மை இல்லாதது. வேண்டுமென்றே புகார்களேக்கூறியுள்ளார்.

ஆகவே இவர் (கருணுநிதி) இந்தியன் பீனல் கோடு 500 பிரிவின் கீழ் தண்டனேக்கு ஆளாக வேண்டியவர் ஆவார். இந்த வழக்கினே தொடர தமிழக கவர்னர் 19-8-81 தேதியிட்ட ஓர் உத்தரவின் மூலம் அனுமதி வழங்கியுள்ளார்.

### கருணுநிதிக்கு நோட்டீஸ்

ஆகவே கோர்ட்டார் இந்த வழக்கை விசாரித்து தக்க நடவடிக்கை எடுக்க கேட்டுக் கொள்கிருேம்.

இவ்வாறு வழக்கில் கூறப்பட்டுள்ளது.

வழக்கு விசாரணே இன்று பிரின்சிபல் செசன்சு நீதிபதி சிங்காரவேலு முன்னிலேயில் வந்தது. இந்த வழக்கை ஏற்றுக் கொண்டு செப்டம்பர் 7ந் தேதி கோர்ட்டுக்கு வருமாறு கருணுநிதிக்கு நோட்டீஸ் அனுப்ப நீதிபதி உத்தரவிட்டார்.

சான்றோனைச் செய்யும்

# புரட்சித்தலைவர்: ஆசிரியர்கள் பாராட்டு

மதுரை, ஆக. 21 2 ஆண்டு பயிற்சி முடித்தமைக்காக ஆசிரியர்களுக்கு சிறப்பு ஊதியம் வழங்கியுள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்குத் தமிழ்நாடு தொடக்கப்பள்ளிஆசிரியர் இணைப்பு இயக்கம் பாராட்டுத் தெரிவித்திருக்கிறது.

போராட்டம் நடத்தாமலே தேர்தல் வாக்குறுதிகளைத்தொடர்ந்துபல்வேறு சலுகைகளை அளித்துள்ள கழக அரசுக்கு ஆசிரியர் இணைப்பு இயக்கம் சார்பில் மாவட்டச் செயலாளர் வி. இருதயராசன் ஒரு அறிக்கையில் நன்றி தெரிவித்துள்ளார்.

## திருமணம்

லட்சுமி ஜுவல்லரி உரிமையாளர் எஸ். டி. முருகபூஷணம் மகன் ஹரிராமுக்கும் குறிஞ்சிப்பாடி சுப்பிரமணியபத்தர் மகள் தேன்மொழிக்கும் வடலூர் சத்திய ஞான சபை சன்னதி தரு ராமலிங்க இல்லம திருமண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

சட்டப் பேரவைத் தலைவர் க. ராசாராம், வாரியார் மற்றும் பலர் மணமக்களை வாழ்த்தினார்கள்.

15 நிமிட நேரம்

# சபை ஒத்திவைப்பு: ஆதித்தனார்மறைவுக்கு சட்டசபை அஞ்சலி

சென்னை, ஆக. 21—முன்னாள் சபாநாயகரும், அமைச்சருமான ஆதித்தனாருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் தமிழக சட்டசபை இன்று கால்மணி நேரம் ஒத்திவைக்கப் பட்டது.

தமிழக சட்டமன்ற கூட்டம் இன்று காலை 10.30 மணிக்கு துவங்கியது.

சென்னை மாநில ஒருங்கிணைந்த சட்டமன்ற பேரவையின் முன்னாள் உறுப்பினராகவும் முன்னாள் மத்திய அமைச்சராகவும் இருந்த டி. ஏ. பை மறைவுக்கு ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்து சபாநாயகர் ராசாராம் இரங்கற் குறிப்பைத் தெரிவித்தார்.

இதையடுத்து சபை உறுப்பினர்கள் இரண்டு நிமிடம் மவுன அஞ்சலி செலுத்தினர்.

முன்னாள் சட்டமன்ற சபாநாயகராகவும், முன்னாள் அமைச்சராகவும் இருந்த சி.பா. ஆதித்தனார் மறைவு குறித்து அவை முன்னவர் டாக்டர் நாவலர் கீழ்க்கண்ட தீர்மானத்தை முன்மொழிந்தார்.

பத்திரிகைத் துறையில் தனக்கென ஒரு தனி வழி வகுத்துக் கொண்டு, பாமரர்களுக்கும் பத்திரிகை படிக்கும் ஆர்வம்ஏற்படும் வகையில் ஆதித்தனார் திறம்பட செயலாற்றினார்.

அவர் 24-5-81 அன்று மறைந்தது குறித்து இப்பேரவை தனது ஆழ்ந்த துயரத்தைத் தெரிவித்துக் கொள்கிறது. அவரது மறைவால் வருந்தும் குடும்பத்தினருக்கு பேரவை தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

இவ்வாறு இரங்கல் தீர்மானத்தை டாக்டர் நாவலர் முன் மொழிந்து ஆதித்தனாரின் சேவைகளைப் பாராட்டிப் பேசினார்.

இதையடுத்து அன்பழகன், ஹாஜா ஷெரீப், சங்கரய்யா, அழகர்சாமி, குமரி அனந்தன், ஆண்டித்தேவர், நெடுமாறன், இஸ்மாயில், சட்டநாதக்கரையாளர், சாகுல் அமீது, மூர்த்தி ஆகியோர் ஆதித்தனாரின் தொண்டினைப் பாராட்டிப் பேசினார்கள்.

சபாநாயகர்ராசாராமும் ஆதித்தனாரின் தொண்டுக்குப் பாராட்டுத் தெரிவித்தார்.

பின்னர் உறுப்பினர்கள் 2 நிமிடம் எழுந்து நின்று மவுன அஞ்சலி செலுத்தினார்கள்.

ஆதித்தனாரின் சேவைகளுக்கு பாராட்டுத்தெரிவிக்கும் வகையிலும், அவரது குடும்பத்தினருக்கு இரங்கலைத் தெரிவிக்கும் வகையிலும் சட்டப் பேரவை 15 நிமிடம் ஒத்தி வைக்கப்பட்டது.

# அயர்லாந்து சிறையில் 10-வது தேசியவாதி மரணம்

பெல்பாஸ்ட், ஆக. 21. வட அயர்லாந்துக்கு விடுதலை அளிக்க வேண்டும் என்று கோரி அயர்லாந்து தேசியவாதிகள் போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

பெல்பாஸ்ட் மேஸ்சிறையில் அடைக்கப்பட்டுள்ள அவர்கள் தங்களுக்கு அரசியல் அந்தஸ்து அளிக்கப்பட வேண்டும் என்று கோரி உண்ணாவிரதம் இருக்கிறார்கள்.

உண்ணாவிரதம் இருந்த தேசிய கொரில்லா மைக்கல் டிவைன் (வயது-27) நேற்று மரணம் அடைந்தார். சிறையில் உண்ணாவிரதம் இருந்து மரணம் அடைந்த கைதிகளில் மைக்கல்டிவைன் 10 வது நபராகும்.

# புதுவையில் கழகப் பொதுக் கூட்டம்

புதுவை, ஆக. 21. இந்த மாதம் 23-ந் தேதி (ஞாயிறு) இரவு 7 மணிக்கு புதுவை, கோவிந்தசாலையில் கழகப் பொதுக் கூட்டம நடக்கிறது.

ஆர். பாலசுப்பிரமணியன் தலைமை வகிக்கிறார். நெய்வேலி எம். முகமது அனீபா, புதுவை மாநில கழகச் செயலாளர் பி. கே. லோகநாதன், அவைத் தலைவர் எஸ். சின்னதுரை துணைச் செயலாளர் ஏ. ராதா கிருஷ்ணன் பொருளாளர் என். உமாபதி கோ. வேணு கோபால், பா. மணிமாறன், ராம் மோகன், பி. கே. பெருமாள், எம். பி. நந்தன், ஆர். ராஜசெல்வம், எம். மணிவண்ணன், பி. வீரப்பன், ஏ. சுல்தான், வி. லோகநாதன், எம். செல்வராஜ், பி. கோபால், கே. குமார் மற்றும் பலர் பேசுகின்றனர்.

(8—ம் பத்தி தொடர்ச்சி)

நாம் வெட்கப்பட வேண்டியதில்லை.

## ரஷிய குடும்பம்

யுத்தம் நடந்த போது கீழ்க்கோடியிலுள்ள நாம் அவ்வளவு துன்பம் அனுபவித்திருக்க முடியாது.

ரஷியக்குடும்பத்தில்யாராவது ஒருவர் யுத்தத்தில் பலியாகியிருப்பார்கள். தமிழக மக்களுக்கு இந்தக் கொடுமை வரக் கூடாது என்றாலும் இந்த உறவு வளர வேண்டும்.

யார் யாருக்கு உதவுகிறார்கள் என்பதை விட உலகத்தில் சச்சரவு ஏற்படாமலிருக்க இந்த உறவு தேவை.

ஆயிரம் பெறுவதும் கொடுப்பதும் அடுத்தவர்களை அடிபணிய வைக்க அல்ல. நம்மை விரும்பிப் பார்க்கிறார்கள் என்றால் நாமும் உறவைக் காட்டி ஆக வேண்டும். அதற்கு இருப்பதை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## அண்ணா சொன்னது

தமிழகம் பொதுவுடைமை கொள்கையை அண்ணா வகுத்து தந்த வழியில் கடைப்பிடிக்கும்.

அண்ணா ஒரு காலத்தில் "நாங்கள்தான் உண்மையான கம்யூனிஸ்ட்" என்றார். நாங்களும் அண்ணாவின் வழியில் அவர் கொள்கைகளைக் கட்டிக் காப்போம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

புரட்சித்தலைவர் பேச்சு:

# கழகம் கடைப்பிடிப்பது அண்ணா வகுத்தளித்த பொதுவுடைமை லட்சியம்



சென்னை, ஆக. 21- அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம், அண்ணா வகுத்துத்தந்த பொதுவுடைமை லட்சியத்தைக் கடை பிடிக்கிறதுஎன்று புரட்சித்தலைவர் கூறினார்.

இந்திய-சோவியத் ஒப்பந்தத்தின் 10-ம் ஆண்டு விழாவும், இந்திய சுதந்திரத்தின் 34-ம் ஆண்டு விழாவும் தமிழகம் வந்த சோவியத் துணை ஜனாதிபதிக்கு வரவேற்பும் அளிக்கும் விழாவும் சென்னை அண்ணா சாலையில் உள்ள ராஜாஜி ஹாலில் நடைபெற்றது.

இந்திய சோவியத் கலாசார கழகத்தின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இக் கூட்டத்திற்கு ம. து. சுந்தரவடிவேலு தலைமை வகித்தார்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர், உலக சமாதானக் குழுத் தலைவர் ரொமேஷ் சந்திரா, சோவியத் துணை ஜனாதிபதி பாலியஸ்குலியோவ், எம். ராமகிருஷ்ணன், தா. பாண்டியன், தி.சு.கிள்ளிவளவன், எஸ்.நாராயணன் ஆகியோர் பேசினர்.

என். டி. வானமாமலை வரவேற்புரை ஆற்றினார்.

முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:

இந்த முப்பெரும் விழாவில் பேசியவர்கள் ஒவ்வொருவரும் நமக்கு இருக்க வேண்டிய, இருந்து தீரவேண்டிய அனுபவத்தை அவர்களின் தியாகம் செய்து பெற்ற அனுபவத்தின் மூலம் வெளியிட்டார்கள்.

இந்திய - சோவியத் நட்புறவு ஒப்பந்தத்தால் மட்டும் ஏற்பட்டதல்ல. அதன் நோக்கம் வலிவு என்ன என்பதையும் இங்கே பேசியவர்கள் வெளியிட்டார்கள்.

சிலர் பாராட்டால் நாட்டுக்குஅறிமுகமாகிறார்கள்; சிலர் அறிமுகமானதால் பாராட்டப்படுகிறார்கள்.

## புரட்சிவீரர் லெனின்

இவர்கள் அறிமுகமானதால் பாராட்டுகிறோம். ஒரு தனி மனிதனின் அறிமுகம் வேறு, ஒரு மார்க்கத்தின் அறிமுகம் வேறு.

இருக்க இடமில்லாத நிலையில் நாட்டை விட்டு துரத்தப்பட்டபோதும் ஒரு கொள்கையை ஆட்சிக்கு கொண்டு வந்த புரட்சி வீரர் லெனினை எண்ணிப் பார்க்க வேண்டும். மார்க்ஸ் சிந்தனையை நாட்டுக்கு சொந்தமாக்கியவர் லெனின்.

என்றாவது ஒரு நாள் நாமெல்லாம் இப்படி ஆக முடியுமா என்பதைப் பார்த்து நமக்கென்று இருக்கின்ற கொள்கையை அப்படி பரவச் செய்ய இங்கிருக்கும் தலைவர்கள் நமக்கு உறுதுணையாக இருப்பார்கள்.

பாரதி நூற்றாண்டு விழா நடத்துவதுபற்றி என்னிடம் உலக சமாதானகுழுத் தலைவர் அனுமதி கேட்டது, சூரியன்சந்திரனிடம் ஒளி தருகிறாயா என்று கேட்பது போல் உள்ளது.

## சூரியனும் சந்திரனும்

சூரியன் சந்திரன் என்று நான் இங்கே குறிப்பிடுவது தனிப்பட்டோர் எவரையுமல்ல.

அவர் அனுமதி கேட்டது விடுதலை இயக்கத்திலும், இலக்கியத் துறையிலும் உரை நடை கட்டுரை எழுதுவதிலும் கூட தனித்தன்மையைக் காட்டிய தேசிய கவிபாரதியின் விழா.

இந்த நேரத்தில் நான் அவருக்கு ஒன்றை சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். தமிழக அரசு இந்த ஆண்டு டிசம்பர் 11 முதல் அடுத்த ஆண்டுவரை ஓராண்டு காலத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனில் விழா நடத்துவதாக முடிவு செய்யப்பட்டுள்ளது.

எப்படி இதை நடத்த முடியும் என்று கேட்டார்கள். தமிழகத்தில் 376 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன. நமக்குத் தேவைப்படும் நாட்கள் 365 தான்.

சில இடங்களில் 2 அல்லது மூன்று பஞ்சாயத்துக்களை இணைத்து விழா எடுக்க இருக்கிறோம். பாரதியார் இந்த சமுதாயத்தை சீர்திருத்த வீர உணர்ச்சியை ஊட்ட பொருளாதாரத்தில் ஒரு வெறிஉணர்வுஏற்படஉதவினார். அந்த வகையில் கருத்துக்களை ஆங்காங்கே வெளியிட ஓராண்டுக் காலமும் விழா நடத்தப்படும்.

## நிறைகுடம் தளும்பாது

சமாதானக்குழுத் தலைவர் எந்த நாள் சொந்த நாள் என்று கருதுகிறார்களோ அந்த நாளில் விழா எடுக்கலாம். தமிழக அரசு வேறு அல்ல.

நானும் முதலமைச்சர். அவரும் முதலமைச்சர் தான். அவர் அமைதிக் குழுவிற்கு முதலமைச்சராய இருக்கிறார். நான் அமைதி கொள்கைக்கு முதலமைச்சராக இருக்கிறேன். நிறைகுடம் தளும்பாது என்பதை அவரிடம் காண்கிறேன்.

தமிழக அரசு எப்படி விழா எடுக்கவேண்டும் என்றுவிரும்புகிறீர்களோ. எப்படி எப்படி விழா அமைய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ—அப்படி உங்களோடு இணைந்து நடத்தலாம்.

இந்திய துணைக் கண்டத்தில் எங்கெங்கு விழா நடத்த வேண்டும் என்று கருதுகிறீர்களோ — ஆங்காங்கு பாரதியின்பெருமைகளைப் பற்றிப்பேச நீங்கள் நினைப்பதைவிட அதிகமான அளவில் பாரதியின் பெருமைகளைப் பேச பாரதியின் நண்பர்கள் உள்ளார்கள். நாங்கள் அவர்களை அனுப்பி வைக்க முடியும்.

## சுதந்திர போராட்டம்

இந்திய சோவியத் நாட்டில் ஏற்பட்ட சுதந்திரப் போராட்டத்தைஎண்ணிப் பார்க்க வேண்டும்.

ரஷ்யாவில் ஏற்றத் தாழ்வை அகற்றி தனி மனித ஆதிக்கத்தை ஒழிக்க போராடி வெற்றிபெற்றார்கள். இங்கே முதலில் விடுதலை பெற்று விட்டு பிறகு சமூக, பொருளாதாரத்தில் மாற்றம் காண நினைத்தோம்.

இந்த போராட்டங்களுக்குப் பிறகு இருநாடுகளிலும் ஏற்பட்ட நிலைமைகளைப்பார்க்கவேண்டும். விடுதலை பெற்றசோவியத் ரஷிய நாட்டிற்கு வந்த ஆபத்துக்களை எண்ணிப்பார்க்க வேண்டும்.

சோவியத் ரஷ்யா விடுதலை பெற்றும் உள் நாட்டில் அமைதியை ஏற்படுத்த பெரும் முயற்சியும் ஆங்காங்கே இருந்த மூட நம்பிக்கைகளை ஒழிக்க வேண்டியதும் இருந்தது. அது மட்டுமல்ல அங்கு ஆட்சியை அமைக்க வேண்டும், அமைத்த ஆட்சியை திறம்பட நடத்த வேண்டும். இதற்கிடையில் நாட்டு மக்களுக்கு நமது சேவைகளை தந்தாகவேண்டும்.

## பின்னால் உள்ள எதிரி

எதிரில் உள்ள எதிரி பெரிய எதிரி அல்ல. நமக்கு பின்னால் இருக்கிற எதிரியை வெற்றி பெறுவதுகடினம். அதுபோல உள்நாட்டில் ஏற்பட்ட பிரச்னை மூட நம்பிக்கை ஆகும்.

வல்லரசுகள்-முதலாளித்துவ நாடுகள் சோவியத் ரஷ்யாவுக்கு உதவுவது இல்லை என்று பகிஷ்கரித்தன.

இப்போது பூதாகாரமாக இருக்கும் சோவியத் ரஷ்யாவை பற்றி முன்பு கார்ட்டூன் போடும்போது ரஷ்யா சுண்டெலி போலவும்மற்றநாடுகள்பூதாகாரமாக இருப்பதுபோலவும் போட்டார்கள். இப்போது ரஷ்யாபூதாகாரமாய்இருக்கிறது! மற்ற நாடுகள் சுண்டெலியாய் இருக்கிறது; இதைத் தெரிந்து கொண்டு நாம் முன்னேற வேண்டும்.

அப்படிப்பட்ட நாட்டிலிருந்து வந்திருப்பவருக்கு நாலரைக் கோடி தமிழக மக்களின் சார்பில் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

ரஷ்யாவில் தங்கள் கொள்கைகளை பிரச்சாரம் செய்வதே விஞ்ஞானமானது. அந்த நாட்டில் 22 நாட்கள் தங்கியிருக்கும் வாய்ப்பு எனக்கு கிட்டியது.

## சுதந்திரமும் கட்டுப்பாடும்

அங்கே விடுதிகளில் "நீ குடிக்கிற மது விஷம் போன்றது. உன்னை நீ காப்பாற்றிக் கொள்" என்று எழுதி வைத்திருக்கிறார்கள்.

குடிக்க அங்கே சுதந்திரம் இருக்கிறது. ஆனால் அறிவு கட்டுப்படுத்துகிறது.

பல நாடுகளில் எதற்கெல்லாமோ விவாகரத்து வந்துவிடுகிறது. இப்படி இருக்கும்போது சோவியத் ரஷ்யாவில் விவாகரத்து பற்றி நாம் கேள்விப்பட்டிருக்க முடியுமா? அங்கு தமிழ்ப் பண்பு இருக்கிறது.

இங்குள்ள பண்பு அங்கே குடியிருக்கிறது. இதைப் பார்க்கும்போது வேறு எந்த நாட்டுடன் நாம் ஒப்பந்தம் செய்ய கொள்ள முடியும்? அதை எண்ணிப்பார்க்கும் போது நாம் ஒன்றுபட்டிருப்பதில் ஆச்சரியமில்லை. பிரிய மாட்டோம் என்பதைச் சொல்ல யாருக்காகவும்

(4-ம் பத்தி பார்க்க)

தேசிய ஒருமைப்பாடு குழுவிலிருந்து

# இனவெறி தூண்டும் கருணாநிதியை நீக்குக: பிரதமருக்குத் தந்தி

சென்னை, ஆக. 21— இன வெறியைத் தூண்டிவிடும் கருணாநிதியைத் தேசிய ஒருமைப்பாடு குழுவிலிருந்து நீக்குங்கள் என்று பிரதமருக்கு தேசிய நல்லொழுக்க மாமன்றம் தந்தி கொடுத்துள்ளது.

தேசிய நல்லொழுக்க மாமன்றத்தின் தலைவர் மயிலைநாதன் பிரதமர் இந்திராவுக்கு ஒரு தந்தி அனுப்பியுள்ளார்.

அதில் 'தனதுமுரசொலி பத்திரிகை மூலம் கருணாநிதி இன வெறியைத் தூண்டுகிறார். எனவே அவரைத் தேசிய ஒருமைப்பாடு கவுன்சிலிருந்து நீக்க வேண்டுகிறேன்'' என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

அதைத் தொடர்ந்து மயிலை நாதன் அனுப்பியுள்ள கடிதத்தில் கூறியிருப்பதாவது:—

தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். மீதுள்ள ஆத்திரத்தில் கருணாநிதி இனவெறியைத் தூண்டிவருகிறார். 1974-ல் 'தமிழர் பாதுகாப்புப் படை'யை நிறுவிய நபர் கருணாநிதி தான்.

கருணாநிதி தூண்டிவிடும் இன வெறியை லேசாக நினைக்கக்கூடாது. தமிழகத்தில் பல்வேறு மொழி பேசும் மக்கள் இருக்கிறார்கள். இது அவர்களையும் பாதிக்கக்கூடியதாகும். அத்துடன் பிற மாநிலங்களில் வாழும் தமிழர்களுக்கும், கருணாநிதியின் செயல் கேடு விளைவிப்பதாக இருக்கும். பம்பாயில் இப்படிப்பட்ட இனக் கலவரம் நடந்ததைக் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

எனவே கருணாநிதியை தேசிய ஒருமைப்பாடு கவுன்சிலில் இருந்து நீக்க வேண்டும். இனவெறிப் போக்கைத் தடுக்கக் கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வாறு பிரதமருக்கு எழுதியுள்ள கடிதத்தில தேசிய நல்லொழுக்க மாமன்றத் தலைவர் மயிலைநாதன் குறிப்பிட்டுள்ளார்.

# நெல்லை மாநாடு செல்லும் தோழர்கட்கு...

சென்னை, ஆக. 21— வரும் செப்டம்பர் மாதம் 5, 6 தேதிகளில் நடக்கும் நெல்லை மாவட்ட கழக மாநாட்டிற்கு செல்ல வரும் 4 ந் தேதி காலை 1 மணிக்கு மெரினா அருகில் உள்ள கண்ணகி சிலையிலிருந்து பேருந்து புறப்படுகிறது. திருவல்லிக்கேணி தொகுதி கழக சார்பில் இந்த பேருந்து புறப்படுகிறது. நெல்லை மாநாட்டில் கலந்து கொள்ள விரும்பும் தோழர்கள் "2 பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5" என்ற முகவரியில் தொடர்பு கொள்ளுமாறு குடிசை மாற்றுவாரிய உறுப்பினர் ஜெ பாலன் கேட்டுக்கொண்டுள்ளார்.

Published by K. Ravindran on behalf of Thansgamani Publication and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor: B. PARASURAMAN

# கழகக் கூட்டத்தில் தி.மு.க. காலிகள் வன்முறை

குன்னூர், ஆக. 21— இம்மாதம் 17ந் தேதி நீலகிரி மாவட்டம் குன்னூரில் கழகப் பொதுக் கூட்டம் நடை பெற்றது.

எம். ஐ. ஜபார் கூட்டத்துக்கு தலைமை வகித்தார். மதுரை இளவரசன், கோபால்ஆகியோர்கலந்து கொண்டு பேசினார்கள்.

அப்போது தி.மு.க.வைச் சேர்ந்த காலிகள் கூட்டத்தில் புகுந்து சோடா புட்டி, கத்தி முதலியவற்றுடன் ரகளை செய்தனர். எம்.ஐ. ஜபார், கோபால், பாலன் ஆகியோர் தாக்கப் பட்டனர்.

இது குறித்து மாவட்ட ஆட்சித் தலைவருக்கும் காவல் துறை அதிகாரிக்கும் புகார் கொடுக்கப் பட்டுள்ளது.

இந்த வன்முறை சம்பவம் குறித்து மாவட்ட கழக துணைச் செயலாளர் எம். வாக்கீஸ், ஒய். சத்தார் விஜயன், எம். இஸ்மாயில் ஆகியோர் கண்டனம் தெரிவித்துள்ளனர்.



தலைமைக்கழக அறிக்கை எண்: 148 81

# கழகத் தோழர்கள் கவனத்துக்கு...

தலைமைக் கழகத்தால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்ட திருச்சி ஏ. அரிகிருஷ்ணன் என்பவரைக் கொண்டு சில ஊர்களில் கழகப் பொதுக் கூட்டம் நடத்தப்பட்டதாகத் தலைமை அலுவலகத்துக்குத் தகவல் வந்துள்ளது.

இது கழகக் கட்டுப்பாட்டை மீறிய செயலாகும். இத்தகைய செயல்களில் ஈடுபடுவோர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

சென்னை-14.
21-8-81.

சென்னை மாவட்ட

# தொகுதிசெயலர்கள் கூட்டம்: ஜேப்பியார் அறிவிப்பு

24-8-81 திங்கள் மாலை 4 மணிக்கு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக தலைமை நிலையத்தில் சென்னை மாவட்ட தொகுதி செயலாளர்கள் கூட்டம், மாவட்ட அவைத்தலைவர் பா. அங்கமுத்து தலைமையில் நடை பெறுகிறது.

பொருள்: அண்ணா பிறந்தநாள்

ஜேப்பியார் எம்.எல்.சி.,

நெல்லையில் செப்டம்பர் 5, 6 தேதிகளில்

# உடல் மண்ணுக்கு, உயிர் கழகத்துக்கு கடலெனத் திரண்டு காட்டுவோம் பூமிக்கு

## ★ காமராஜர் - இந்திரா படங்கள் அடித்து நொறுக்கப்பட்டன

## ★ காங்கிரஸ் கொடிக்கம்பங்கள் வெட்டி வீழ்த்தப்பட்டன

# இ. காங்கிரசார் மீது தி.மு.க. வெறித்தாக்கு

## சிவகங்கையில் பயங்கர வன்முறை

**மதுரை, ஆக. 21— சிவாஜி மன்றத்துக்குள் புகுந்து அங்கிருந்த காமராஜர் இந்திரா. சிவாஜிகணேசன் ஆகியோர் படங்களை தி. மு. க வினர் அடித்து நொறுக்கினுர்கள்.**

ரோட்டில் தென்பட்ட இந்திரா காங்கிரஸ் ஊழியர்களையும் தி. மு. க. வினர் வெறித்தன மாகத் தாக்கினுர்கள். இந்திரா காங்கிரஸ் கொடிக் கம்பங்களை தி. மு. க. வினர் வெட்டி வீழ்த்தினுர்கள்.

சிவகங்கையில் தி.மு.க. வினர் நடத்திய இந்த வன்முறை வெறியாட்டம் பற்றிய விவரம் வருமாறு:

கடந்த 16-ந்தேதியன்று ராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கையில் இந்திரா காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் பேசிய பேச்சாளர்கள் தி.மு.க.வை விமர்சனம் செய்து பேசினுர்கள்.

### திட்டமிட்ட வன்முறை

இதனுல் பெரும் ஆத்திர மடைந்த தி.மு.க. வினர் கடந்த 18-ந்தேதி பயங்கர வன்முறையில் இறங்கினுர்கள். திட்டமிட்டு அவர்கள் வன்முறையில் ஈடுபட்டதாகத் தெரிகிறது.

18-ந் தேதியன்று சிவகங்கை காந்தி ரோட்டில் சில தி. மு. க. வினர் வெறித்தனமாக வந்தனர். இந்திரா காங்கிரசாரை மிகவும் இழிவாக ஏசியபடி அவர்கள் வந்தனர்.

அப்போது ராஜா என்ற இந்திரா காங்கிரஸ் தொண்டர் அந்த வழியாக வந்தார். அவரை தி. மு. க. வினர் கண்மூடித்தனமாகத் தாக்கினுர்கள். படுகாயமடைந்த ராஜா அந்த இடத்திலேயே சுருண்டு விழுந்தார்.

### படங்கள் தூள் தூள்

அந்த நேரத்தில் சிவகங்கை தெற்கு ரத வீதியில் தி. மு. க. வைச் சேர்ந்த இன்னெரு கும்பல் வன்முறையில் இறங்சியது. அந்தக் கும்பல் சிவாஜி ரசிகர் மன்றத்துக்குள் நுழைந்து அங்கிருந்த காமராஜர், இந்திரா சிவாஜி கணேசன் ஆகியோரின் படங்களை அடித்து நொறுக்கியது. கண்ணுடி போடப்படாமல் மாட்டப்பட்டிருந்த இந்திராவின் படத்தை தி.மு.க.வினர் கிழித்தெறிந்தனர்.

இந்த வன்முறையை நடத்திவிட்டு வெளியேறிய தி.மு.க. கும்பல் அந்த ரோட்டில் இருந்த இந்திரா காங்கிரஸ் கொடிக்கம்பங்களை வெட்டிச் சாய்த்தது.

தி. மு. க.வினரின் இந்த வன்முறை வெறியாட்டம் பற்றி போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது. இது தொடர்பாக போலீசார் ஐந்து வழக்குகளைப் பதிவு செய்து விசாரணை நடத்தி வருகிறுர்கள்.

(8 ம் பத்தி தொடர்ச்சி)

இருந்துஅந்த பைல் அட்டையைதட்டிப்பறித்தார்.

இந்தச் சம்பவங்கள் மேலும் அவையில் பரபரப்பை ஏற்படுத்தியது.

கூச்சலும் குழப்பமும் அடங்கி அமைதிபெற சுமார் 20 நிமிட நேரம் ஆயிற்று.

---

இலங்கையில் கெடுபிடி

## இந்திய பத்திரிகை ஆசிரியர் கைது: காமிரா பறிமுதல்

**கொழும்பு, ஆக. 21— இலங்கைத் தமிழர்கள் வாழும் ரத்னபுரா பகுதியில் நடந்த வன்முறை - தீயிடல் சம்பவங்கள் பற்றி பேட்டி காணச் சென்ற இந்தியப் பத்திரிகையாளர் கைது செய்யப்பட்டார்.**

அண்மையில் தமிழர்கள் வாழும் பகுதிகளில்ஒன்றுன ரத்னபுரா பகுதியைப் பார்வையிட ''இந்தியா டுடே'' பத்திரிகையின் சீனியர் எடிட்டர் வெங்கட்நாராயணன் சென்றுர்.

அந்தப் பகுதியில் நடந்த வன்முறைச் சம்பவங்கள் பற்றி செய்தி சேகரித்துக் கொண்டு இருந்தபோது அவர் கைது செய்யப்பட்டார். பிறகு அவர் விடுதலை செய்யப்பட்டார்.

நாராயணனுடன் கூட இருவர் சென்றனர். நாராயணன் அங்கே தமிழர்களிடம் பேட்டி கண்டுகொண்டிருக்கும்போது உடன் வந்தவர்கள் சேதமுற்ற அந்தப் பகுதிகளைப் படம் எடுத்தனர். தமிழர் கடைகள்வீடுகள் சேதமுற்று இருந்ததைப் படம் எடுத்தனர்.

அந்தப் பகுதியை போட்டோ எடுக்கச் சென்ற காமிராக்காரர்களது காமிராக்களைப் பறிமுதல் செய்தனர்.

இலங்கையில் தமிழர்கள் மீது வன்முறையும், அடக்குமுறையும் ஏவிவிடப்பட்டுள்ளது தெரிந்ததே.

தமிழர்கள் தாக்கப்படுகிருர்கள். தமிழர்கள்வாழும் பகுதிகள் தீக்கிரையாக்கப்படுகின்றன.

அந்தக் காமிராக்களைப் போலீசார் பறிமுதல் செய்தனர். நாராயணனிடம் இருந்த டேப்ரெகார்டரையும் பறிமுதல் செய்தனர். பிறகு இவைகளை திரும்பக் கொடுத்து விட்டனர்.

இப்படிப்பட்ட வகையில் இந்தியப் பத்திரிகையாளர்களிடம் இலங்கை அரசு கெடுபிடி செய்துவருகிறது.

---

ஆசிரியர்களுக்கு ஊதிய உயர்வு:

## அரசுக்கு ஆசிரியர் சங்கம் பாராட்டு

சென்னை, ஆக. 21— பயிற்சித் தகுதி பெற்ற அனைத்து இடைநிலை ஆசிரியர்களுக்கும் ஜூன் மாதம் 1-ந் தேதி முதலாகவே அமலுக்கு வரும் வகையில் ஊதிய உயர்வு வழங்கியதற்கும், நியமனத் தேதியிலிருந்து தொடர்ந்து 20 ஆண்டுகள் பணியாற்றியமைக்காக சிறப்புத் தேர்வு நிலை வழங்கி ஆணை பிறப்பித்ததற்கும் தமிழக அரசிற்கும், முதல்வர்புரட்சித்தலைவர், கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ஆகியோருக்கு பாராட்டும், நன்றியும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று தமிழ்நாடு இடைநிலை ஆசிரியர் மன்றத்தின் மாவட்டச் செயலாளர்வே.குணசீலன் தெரிவித்துள்ளார்.

---

நாடாளுமன்றத்தில் அமைச்சர் தகவல்.

## தேர்தல் முறைகளை திருத்தி அமைக்க சட்டம் வருகிறது

**புதுடெல்லி, ஆக. 21— தேர்தல் விதி முறைகளைத் திருத்தி அமைப்பதற்கு நாடாளு மன்றத்தில் சட்டம் கொண்டுவரப்பட விருக்கிறது என்று மத்திய சட்ட அமைச்சர் சிவசங்கர் தெரிவித்திருக்கிறுர்.**

நேற்று நாடாளுமன்றத்தில் தேர்தல் சட்டத் திருத்தங்கள் பற்றி விவாதம் நடைபெற்றது. ஜனதா உறுப்பினர் மது தந்தவதே கொண்டு வந்த தீர்மானத்தின் மீது சுமார் 4 மணி நேரம் விவாதம் நடந்தது.

விவாதத்திற்குப் பதில் அளித்துப் பேசிய மத்திய சட்ட அமைச்சர் சிவசங்கர் கூறியதாவது:

தற்போது நடைமுறையில் உள்ள தேர்தல் விதிமுறைகளை மாற்றி அமைத்து திருத்தம் செய்வதற்கு மத்திய அரசு யோசித்து வருகிறது. தேர்தல் சட்டங்களை பரிசீலனை செய்து முடிவு செய்வதற்கு முன்னுல் அனைத்துக் கட்சித் தலைவர்களுடனும் அரசு ஆலோசனை நடத்தும். இதுவரை 70 ஆலோசனைகளை உறுப்பினர் கொடுத்துள்ளனர். இந்த கருத்துக்கள் பற்றியும் அரசு பரிசீலிக்கும்.

தேர்தல் விதிமுறைகளை உடனடியாக மாற்றி அமைப்பதற்கில்லை. அந்த மசோதாவை கொண்டு வருவதற்கு சிறிது காலம் பிடிக்கும்.

இவ்வாறு சட்ட அமைச்சர் சிவசங்கர் கூறினுர்.

பின்னர் மதுதந்தவதேயின் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

தேர்தலில் புதிய முறையில் ஓட்டுப் போடுவதற்கு மின்சார யந்திரங்கள் பயன்படுத்தப்பட விருக்கின்றன. 250 மின்சார யந்திரங்களை அரசு வாங்கியிருக்கிறது. முனிசிபல் மற்றும் இடைத் தேர்தல்களில் இந்த யந்திரங்கள் பரீட்சார்த்தமாக பயன்படுத்தப்படும். முன்னேடி சோதனை வெற்றிபெற்றுல் தொடர்ந்து மற்ற தேர்தல்களிலும் இவை பயன்படுத்தப்படும்.

தேர்தல் கமிஷனின் ஆலோசனைப்படியே இந்த யந்திரங்கள் வாங்கப்பட்டுள்ளன.

நேற்று நாடாளுமன்றத்தில் தேர்தல் பற்றிய தீர்மானத்துக்கு பதில் அளித்த அமைச்சர் சிவசங்கர் இதைத் தெரிவித்தார்.

---

அசாம் தலைநகர்

## கவுகாத்தியில் ரயில் விபத்து: சாவு 5 காயம் 30

கவுகாத்தி, ஆக. 21— அசாம் மாநில தலைநகரான கவுகாத்தி ரயில் நிலையம் அருகே பயங்கர ரயில் விபத்து ஏற்பட்டது.

இந்த விபத்தில் இரு ராணுவ வீரர்கள் உட்பட ஐவர் அந்த இடத்திலேயே நசுங்கிச்செத்தனர். மேலும் 30 பேர் படுகாயம் அடைந்தனர்.

நின்று கொண்டு இருந்த ஒரு பிரயாணி ரயில் மீது வேறு ஒரு ரயில் பயங்கரமாக மோதியதால்விபத்து ஏற்பட்டது.

பயங்கர வெடிகுண்டு வெடிப்பதுபோல இடித்து விபத்து ஏற்பட்டது. நின்று கொண்டிருந்த ரயிலின் கடைசிப்பெட்டி சுக்குநூருகியது.

---

ஆதிகேசவப் பெருமாள் ஆலய அறங்காவலர்

## குழுத் தலைவராக மண்ணடி கிருஷ்ணமூர்த்தி

சென்னை, ஆக. 21— சென்னை ஆச்சாரப்பன் தெருவில் உள்ள ஆதிகேசவப்பெருமாள் ஆலயஅறங்காவலர் குழுத்தலைவராக மண்ணடி கிருஷ்ணமூர்த்தி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அறங்காவலர்களாக கே. எல்லப்பன். எஸ்.எம். கருணுநிதி, டி. பாண்டுரங்கன் கே. தாமோதரன் ஆகியோர் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

---

ரூ. 76 லட்சம் செலவில் கட்டப்பட்டுள்ள

## தர்மபுரி எண்ணெய் தொழிற்சாலையில் லியாகத் அலிகான்

**சென்னை, ஆக. 21— ரூபாய் 76 லட்சம் செலவில் தர்மபுரியில் கட்டப்பட்டுள்ள எண்ணெய்த் தொழிற்சாலையைத் தமிழ்நாடு விவசாய தொழில் கழகத் தலைவர் லியாகத் அலிகான் நேற்று சுற்றிப்பார்த்தார்.**



தமிழ்நாடு விவசாயத் தொழில் கழகத்தலைவர் லியாகத்அலிகான் தமிழக பகுதிகளில் கடந்தவாரம் சுற்றுப்பயணம் செய்தார்.

கோயம்புத்தூரில் உள்ள அக்ரோ அலுவலகத்தைப் பார்வையிட்டார்.

உடுமலைப் பேட்டையில் உள்ள குதிரை மசால்மாவு ஆலைக்குச்சென்று தொழிற்சாலை முன்னேற்றம் குறித்து அவர் அதிகாரிகளிடம் ஆலோசனை நடத்தினுர்.

மதுரையில் வேளாண்மைத்துறை அமைச்சர் காளிமுத்துவை சந்தித்து அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் பணிகள் குறித்து உரையாடினுர்.

தர்மபுரியில் ரூபாய் 76 லட்சம் செலவில் கட்டப்பட்டுள்ள எண்ணெய் தொழிற்சாலையையும் அவர் சென்று பார்த்தார்,

அலுவலர்கள் சார்பில் லியாகத் அலி கானுக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. ஊழியர்களின் கோரிக்கைகள் குறித்து லியாகத் அலிகான் ஆவன செய்வதாக உறுதி அளித்தார்.

கடந்த 16-ம் தேதி வாணியம்பாடியில் நடைபெற்ற கழக பொதுக்கூட்டத்திலும் அவர் கலந்து கொண்டு பேசினுர்.

---

## நாடாளுமன்றத்தில் புகைப்படம் கிழிப்பு: உறுப்பினர் பாய்ச்சல்

**புதுடெல்லி ஆக 21— நாடாளுமன்றத்தில் புகைப்படம் ஒன்றை ஆவேசத்துடன் கிழித்து எறிந்தார் ஒரு உறுப்பினர். இதைத் தொடர்ந்து கூச்சலும் - குழப்பமும் ஏற்பட்டது, மந்திரியின் பைல் ஒன்றையும் உறுப்பினர் தட்டிப்பறித்தார்.**

தேர்தல்விதிமுறைகளைத் திருத்தி அமைப்பது பற்றி நேற்று நாடாளுமன்றத்தில் விவாதம் நடந்தது. அப்போது அண்மையில் நடைபெற்ற கார்வார்தொகுதி இடைத் தேர்தலில் வன்முறைச் சம்பவங்கள் இடம் பெற்றன என்று ஜனநாயக சோஷலிசகட்சிஉறுப்பினர் அரிகேஷ்பகதூர் கூறினுர்.

ஆளும் கட்சியான இந்திரா காங்கிரஸ் காரர்கள் தான் இந்த வன்முறை சம்பவங்களுக்கு காரணமானவர்கள் என்று கூறி அந்த சம்பவங்களை சித்தரிக்கும் இரண்டு புகைப்படங்களை அவர் காண்பித்தார். பின்னர் அவற்றை துணைச் சபாநாயகரின மேஜை மீது வைத்தார்.

இப்படி புகைப்படங்களை வைப்பதையும் அதைப் பற்றி பேசுவதையும் தாம் அனுமதிக்கப் போவதில்லை என்று துணை சபாநாயகர் சொன்னதும் மீண்டும் அரிகேஷ் பகதூர் வேகமாக துணை சபாநாயகரின் இருக்கைக்குஓடினுர். அவர் மேஜை மீது வைத்திருந்த 2 புகைப்படங்களையும் ஆவேசத்துடன் எடுத்துக் கிழித்து எறிந்தார்,

இந்தச்சம்பவம் நாடாளுமன்றத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

இதைத் தொடர்ந்து அவையில் கூச்சலும்குழப்பமும் ஏற்பட்டது. உறுப்பினர் சிலர் ஒருவரை ஒருவர் குற்றம்சாட்டிப் பேசினுர்கள்.

அரிகேஷின் செய்கைகளை கடுக்கும் வகையில் மற்றொரு ஜனநாயக சோஷலிச கட்சி உறுப்பினரான நீலலோகிததாச நாடார் அரிகேஷை நோக்கி விரைந்து சென்றுர். ரெயில்வே துணை அமைச்சர் மல்லிகார் ஜூனணின பைல் அட்டை ஒன்றை பிடித்து இழுத்தார், இதமகுள இந்திரா காங்கிரஸ் உறுப்பினர் ஒருவர் நீலலோகிததாசனின் கையில

(4 ம் பத்தி பாரக்க)

---



---

## மதுரை இளவரசன் சுற்றுப்பயண நிகழ்ச்சிகள்

ஆகஸ்ட் - 26 துவரங்குறிச்சி, 27 புதிய குளம். (கோவை), 28 வருசைநாடு, 29 பழநி.

தொடர்பு கொள்ளும்.

முகவரி:-

மதுரை இளவரசன்
பி.காம்.எம்.சி,

நகர் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றம்,
8, நியூ ரெகுநாத லாட்ஜ்,
டவுன் ஹால் ரோடு,
மதுரை-1.

---

## ஐசரிவேலன் தலைமையில் நடந்த திருமணம்

சென்னை, ஆக. 21— சென்னை வண்ணுரப்பேட்டையில் டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி பார்த்தசாரதி பிள்ளை தெரு-3ம் எண்ணுள்ள இல்லத்தில் எம். சுப்ரமணியின் இளையகுமாரன் கோடீஸ்வரனுக்கும் சேந்தமங்கலம் கனகசபையின் குமாரத்தி ராஜேஸ்வரிக்கும் இன்று காலை ஐசரிவேலன் தலைமையில் திருமணம் நடந்தது.

தா. வே. முருகேசனுர் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, வண்ணை க. சண்முகம், டி.சந்திரபாபு, கண்ணுயிரம், வண்ணை க. விஸ்வநாதன் அலைஓசை சண்முகம், அப்துல்கனி, லோகநாதன், சங்கரன், ஷரீப் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

---

நெல்லையில் செப்டம்பர் 5, 6 தேதிகளில்

## கிளம்புது காண்நெல்லைக்கு தமிழ்ச்சிங்கக்கூட்டம்

## கெடுமதியார் நடுநடுங்கி எடுக்கிறர் ஓட்டம்



# அண்ணா




நடக்க முடியாதவர்கள் - விழி இழந்த ஆதரவற்றவர்கட்கு

## உதவித்தொகையும் அரிசியும் வீடுதேடி வரும்: டாக்டர் நாவலர் தகவல்

**தஞ்சாவூர், ஆக 21—நடந்து செல்ல இயலாமல் இருக்கும் ஊனமுற்ற அனாதைகள், பார்வையற்ற அனாதைகட்கு பென்ஷன் தொகையும், வாரம் ஒரு கிலோ அரிசியும் வீடு தேடி வரும் என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.**

வேலை செய்ய இயலாத ஆதரவற்ற விவசாயத் தொழிலாளர்கள் 26 ஆயிரம் பேர்களுக்கு விரைவில் உதவித் தொகை வழங்கப்படும் என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.

ஏற்கனவே ஒருலட்சத்து 50 ஆயிரம் பேர்கள் இந்த உதவியைப் பெற்று வருகிறார்கள். இப்போது மேலும் 50 ஆயிரம் பேர்கள் இந்த உதவியைப் பெற இருக்கிறார்கள்.

தஞ்சை மாவட்டத்தில் புதிய துணை தாலுகாவாக உயர்வு பெற்றுள்ள குடவாசல்துணைத்தாலுகாவை நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் முறைப்படி துவக்கி வைத்தார்.

அப்போது நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசியதாவது:-

உடல் ஊனமுற்ற ஆதரவற்ற முதியோர்க்கு கழக அரசு உதவித்தொகையை அதிகரித்துள்ளது. அந்த எண்ணிக்கையையும் அதிகரித்துள்ளது.



உதவித் தொகைபெறும் உடல் ஊனமுற்றோரில் நடக்க இயலாதவர்கள், பார்வை இழந்தவர்கட்கு உதவித்தொகையையும வாரம் ஒரு கிலோ அரிசியையும் அவர்கள் வீட்டிலேயே வழங்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

வேலை செய்ய இயலாத ஆதரவற்ற விவசாயத் தொழிலாளர் 26 ஆயிரம் பேர்களுக்கும் விரைவில் பென்ஷன் தொகை வழங்கப்படும்.

முதியோர் உதவித் தொகை பெறுபவர்கட்கு வேட்டி—சேலை வழங்கப்படுகிறது.

## 52 லட்சம் சேலை-வேட்டி

இந்த சுதந்திர தினத்திற்கு ஒன்றரை லட்சம் பேர்களுக்கு சேலை வேட்டி வழங்கப்பட்டது. இதன் மதிப்பு ரூ. 52 லட்சம் ஆகும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

விழாவுக்கு வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமை வகித்தார்.

## போப்பை சுட்டவனிடம் இந்திய பாஸ் போர்ட்டா?

புதுடெல்லி, ஆக. 21- போப் ஆண்டவரை சுட்டதாக கைது செய்யப்பட்ட முகமதுஅலியிடம் இந்திய பாஸ்போர்ட் இருந்ததா என்பது பற்றி விசாரணை நடப்பதாக நாடாளுமன்றத்தில் வெளி விவகார அமைச்சர் நரசிம்மராவ் தெரிவித்தார்.

துருக்கியிலிருந்து வெளியேறும் போது அவர் இந்திய பாஸ்போர்ட் பெற்றிருக்கலாம் என்றும், அப்படியானால் எவ்வாறு அந்த பாஸ்போர்ட் அவருக்கு கிடைத்தது என்றும் புலனாய்வு நடக்கிறது என்றும் அவர் கூறினார்.

## தேவராஜ் அர்ஸ் மாநிலக்கட்சி தொடங்குகிறார்

பெங்களூர், ஆக. 21— இந்திரா காங்கிரஸ்தான் உண்மையான காங்கிரஸ் கட்சி என்று தேர்தல் கமிஷன் தீர்ப்பு அளித்திருக்கிறது.

இதைத் தொடர்ந்து அர்ஸ் காங்கிரசுக்கு புதிய பெயர் சூட்டுவது பற்றி அர்ஸ் காங்கிரஸ்காரர்கள் யோசனை செய்து வருகிறார்கள்,

இந்த நிலையில் கர்நாடகத்தில் மாநில கட்சி ஒன்றை அமைப்பது குறித்து அர்ஸ் காங்கிரஸ் தலைவர் தேவராஜ் அர்ஸ் தீவிரமாக ஈடுபட்டுள்ளார்.

கர்நாடக மாநில அர்ஸ் காங்கிரஸ் பிரமுகர்கள் மற்றும் முக்கியத்தலைவர்கள் பலர் தேவராஜ் அர்சுக்குத் தங்களது ஆதரவைத்தெரிவித்துள்ளனர்.

அர்ஸ் காங்கிரசுக்கு புதிய பெயர் அளிப்பதோ அல்லது மாநில கட்சி ஒன்றை துவங்குவதோ எதற்கும்தங்களது ஆதரவு அர்சுக்கு உண்டு என்றும் அவர்கள் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்கள்.

முந்திரி தொழிலாளர்கட்கு

## ஊதியக்குழு: நம்பிராஜன் நியமனம்

நெல்லை, ஆக. 21— முந்திரி தொழிலாளர்கட்கு முதன்முறையாக ஊதிய நிர்ணயக் குழுவை தமிழக அரசு அமைத்துள்ளது.

இக்குழுவில் தொழிலாளர்பிரதிநிதியாக அண்ணா தொழிற் சங்கப் பேரவை துணைத் தலைவர் எஸ். நம்பிராஜன் அரசால் நியமிக்கப்பட்டு இருக்கிறார்.

6 மாத காலத்தில் இக்குழு அறிக்கையை அரசுக்கு தாக்கல் செய்யும்.

தொழிலாளர்நல துணைக் கமிஷனர் விசுவநாத் இக்குழுவின் தலைவராக இருப்பார்.

## தூத்துக்குடியில் வளர்மதி, வலம்புரிஜான், பேசுகிறார்கள்

தூத்துக்குடி, ஆக. 21— தூத்துக்குடி சிதம்பர நகர் மெயின் ரோடில் நாளை மாலை 6 மணி அளவில் நடக்கும் கழகக் கூட்டத்தில், கழக மகளிர்பிரிவுச் செயலாளர் பா. வளர்மதி எரிமலை சங்கரன் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

23-ந் தேதி இரவு 7மணி தூத்துக்குடி மாசிலாமணி பூங்கா அருகில் நடக்கும் கூட்டத்தில் ‘தாய்’ வாரஏட்டின் ஆசிரியர் வலம்புரிஜான் மானூர் மீரான் ஆகியோர் பேசுகிறார்கள்.

இந்த இரண்டு கூட்டங்களிலும் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் மு. பாலகிருஷ்ணன், நகர செயலாளர் வி. ஜெயராஜ் எம், எஸ். சிவசாமி, எம். வி. தாமஸ், எஸ். தயாளன் ஆறுமுகநயினார் ஏ.பெரியசாமி, ஆர்.குமார் தங்கமாரியப்பன், எம். பி. பூவலிங்கம், ஜார்ஜ் ஆகியோர் பேசுகிறார்கள்.

## வருமான வரிச் சட்டம் திருத்தப்படும்

புதுடெல்லி, ஆக 21— வருமான வரிச் சட்டத்திலுள்ள ஓட்டைகளை அடைக்க சட்டத்திருத்தம் கொண்டு வரப்படும் என்று நிதி அமைச்சர் ஆர். வெங்கடராமன் நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்.

நெல்லுக்கு அதிக விலை தருக:

## நாடாளுமன்றத்தில் மோகனரங்கம் கோரிக்கை

**புதுடெல்லி. ஆக. 21—நெல்லுக்கு அதிக விலை தருக என்று நாடாளுமன்ற மேலவையில் கழக எம். பி. மோகனரங்கம் கோரினார்,**

இதுபற்றி விவாதம் நடந்தபோது மோகனரங்கத்திற்கும், மத்திய அமைச்சர் ராவ்வீரேந்திர சிங்கிற்கும் சுவையான வாக்குவாதம் ஏற்பட்டது.

நெல்லுக்கு அதிகவிலை தரக்கோரும் கவன ஈர்ப்புத் தீர்மானம் ஒன்றைக் கழக எம். பி. மோகனரங்கம் நேற்று நாடாளுமன்ற மேலவையில் கொண்டு வந்தார்.

கவனஈர்ப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்த மோகனரங்கம் நெல் கொள்முதல் விலையை உயர்த்த வேண்டிய அவசிய அவசர நிலைமைகளை விளக்கி வீராவேசமாகப் பேசினார்:

விவசாயிகளுக்காக வாதாடும் வகையில் மோகனரங்கம் வேகமாகப் பேசிக்கொண்டு இருந்த போது மத்திய விவசாயத் துறை அமைச்சர் ராவ் வீரேந்திரசிங் குறுக்கிட்டார்.

“உங்களைப் பார்த்தால் ஒரு நெல் உற்பத்தி செய்யும் விவசாயி போல தோன்றவில்லையே. ஒரு குத்துச்சண்டை வீரர் போல அல்லவா காணப்படுகிறீர்கள்” என்று குறிப்பிட்டார்.

## பதிலுக்கு பதில்

மத்திய அமைச்சர் அப்படிக் கூறியதும் கழக எம். பி. மோகனரங்கம் இதற்கு உடனே பதில் அளித்தார்.

ஆங்கில சித்திரப் படங்களில் வரும் “பாந்தன்” மர்மவீரன் போல அமைச்சர் காணப்படுகிறார். சமீபத்தில் இந்தப்படம் தலைநகரில் திரையிடப்பட்டிருக்கிறது” என்றார்.

அப்போது சபையில் சிரிப்பொலி எழுந்தது. அந்த சிரிப்பொலிக்கு இடையே இங்கே அந்த குத்துச் சண்டை காட்சி செய்து காட்டப்படுமா? என்று கேட்டனர்.

அப்படிக் குத்துச் சண்டைக் காட்சிகளை இங்கே நடத்த விதிமுறைகள் இல்லை என்று அமைச்சர் ராவ் வீரேந்திர சிங் சுட்டிக்காட்டினார்.

அப்போது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எம். பி.யான பி. ராமமூர்த்தி எழுந்து ரூல்ஸ் கமிட்டிக்கு இது பற்றி தலைவர் சொல்லலாமே என்றார். அப்போதும் சபையில் சிரிப்பு எழுந்தது.

விவாதத்திற்கு பதில் அளித்த அமைச்சர் ராவ் வீரேந்திரசிங் நெல்பயிரிடுபவர்களின் கஷ்டங்களை மத்திய அரசு உணர்ந்து இருக்கிறது என்றார்.

## மேட்டூர் அணை நிரம்பியது

திருச்சி, ஆக. 21— மேட்டூர் அணை இன்று மாலைக்குள் நிரம்பி விடும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

மேட்டூர் அணைக்கு நீர் வரத்து பெரும் அளவில் இருப்பதால் அணை வேகமாக நிரம்பி வருகிறது.

அணையின் முழு அளவு 120 அடி. நேற்று 116·50 அடியை நீர்மட்டம் எட்டியது.

அணைக்கு ஒரு லட்சத்து 26 ஆயிரத்து 341 கன அடி தண்ணீர் வந்து கொண்டு இருக்கிறது.

அணையில் இருந்து 36 ஆயிரம் கனஅடி தண்ணீர் வெளிவிடப்படுகிறது.

இன்று மாலைக்குள் அணை நிரம்பி வழிய முற்பட்டு விடும், நீர் வரத்து தொடர்ந்து அதிகரிப்பாகவே இருந்தால் கொள்ளிடத்தில் தண்ணீரை திறந்துவிட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## பெங்களூரில் பெண்கற்பழிப்பு

புதுடெல்லி, ஆக. 21 பெங்களூரில் ஒரு பெண் கற்பழிக்கப்பட்ட விஷயம் நாடாளுமன்றத்தில் கிளப்பப்பட்டது.

கல்வி இலாகா ராஜாங்க மந்திரி ஷீலா கவுல் பதிலளிக்கையில் பெண்ணைக் கற்பழித்ததாக 5 விளையாட்டு வீரர்கள் கைது செய்யப்பட்டனர் என்றும் அவர்கள் ஆசிய விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.





119 வது வட்ட கழக

## பொது உறுப்பினர் ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக 21— சென்னை 119- வட்ட கழக பொது உறுப்பினர்கள் ஆலோசனைக் கூட்டம் இம்மாதம் 29-ந்தேதி (சனி) இரவு 8 மணிக்கு தி. நகரிலுள்ள எல். ஆர். சாமி திருமண மண்டபத்தில் பா. ஜெயராமன் தலைமையில் நடக்கிறது. வட்ட உறுப்பினர் அனைவரும் தவறாமல் கலந்து கொள்ள வேண்டும் என்று வட்ட செயலாளர் கே. சாமிநாதன் தெரிவித்துள்ளார்.

## மதுரை மாநகராட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு.க. உறுப்பினர்கள் கூட்டம்

மாநகராட்சிக்கழக அலுவலகத்தில் 24·8·81 திங்கள் மாலை 5மணி அளவில் அவைத் தலைவர் திரு.கே. எஸ். சந்தானம் அவர்கள் தலைமையில் நடைபெறும். மாநகராட்சிக் கழக உறுப்பினர்கள் கூட்டத்திற்கு அனைவரும் தவறாது வருகை தர வேணுமாய் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

க. இளவரசன்
(கொறடா)

## விற்பனையாளர்களுக்கு

ஜூலை மாத பட்டியல் தொகையை இதுவரையில் அனுப்பி வைக்காத ஏஜெண்டுகளுக்கு பிரதிகள் அனுப்புவது 25·8·81 முதல் நிறுத்தப்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். எனவே இதுவரையில் தொகையை அனுப்பாதவர்கள் உடனடியாக பாக்கியின்றி அனுப்பி கணக்கை நேர்செய்ய கோரப்படுகிறார்கள்.

விநியோக நிர்வாகி
“அண்ணா”



## ஆபாச உடையணிந்து வந்த ஆரணங்கு மீது கோபாவேசம் கொண்ட தலைமை நீதிபதி

புதுடெல்லி, ஆக. 21— உச்ச நீதிமன்றத்தில் ஒரு இளம் பெண்ணை வெளியேறச் சொன்னார் தலைமை நீதிபதி சந்திரசூட்.

இதற்குக் காரணம்அந்த அழகிய இளம் பெண் ஆபாச உடை அணிந்து இருந்தாள். ஜீன்ஸ் அணிந்து கவர்ச்சியை வெளிப்படுத்தும்வகையில் காணப்பட்டாள்.

ஒரு வழக்கறிஞரோடு அந்த கவர்ச்சி உடைப் பாவை அன்ன நடைபோட்டு சின்ன இடை நெளிய நுழைந்தாள்.

தலைமை நீதிபதி சந்திரசூடின் கண்ணில் அந்தக் கவர்ச்சிப்பாவை தென்பட்டு விட்டாள்.

உச்ச நீதி மன்றத்தில் இப்படி உடை அணிந்து வருவதா என்று தலைமை நீதிபதி சீற்றம் கொண்டார்.

நீதிமன்ற ஊழியர் ஒருவரை அனுப்பி வழக்கறிஞரை அழைத்தார்,

யார் அந்தப் பெண் என்று தலைமை நீதிபதி கேட்டார்.

தனது கிளார்க் அந்தப் பெண் என்று வழக்கறிஞர் பதில் கொடுத்தார்.

நீதிதேவன் கோயிலில் பெண்கள் இப்படி ஆபாச உடை அணிந்து வருவது அழகல்ல. ஆகவே அவளை நீதிமன்றத்தில் இருந்து வெளியே போகச் சொல்லுங்கள்.

அடுத்த தடவை இங்கே வரும் போது சேலைகட்டி வரச் சொல்லுங்கள் என்று தலைமை நீதிபதி அந்த வக்கீலிடம் தெரிவித்தார்.

டெல்லி கடைத் தெருவில் சேலைகள் தாராளமாகக் கிடைக்கின்றன என்றும் அப்போது தலைமை நீதிபதி தெரிவித்தார்.